## விற்பனை வரியால் குற்றமும் தண்டனையும்

சென்னை, ஆக. 27—

1953—54 முதல் கடந்த 3 வருடங்களில் 20,787 வியாபாரிகள் மீது கேஸ் போடப்பட்டது. அதில் 14,951 பேர்களுக்கு தண்டனை விதிக்கப்பட்டது என்று மேல்சபையில் மந்திரி மாணிக்கவேலர் தெரிவித்தார்.


# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 விலை 1 அணா


## தேசிய செல்வங்கள்

புதுடெல்லி, ஆக. 25—

புராதனமான கலைச் செல்வங்களைப் பாதுகாக்கும் திட்டத்தில் தாகூர், வித்யாசாகர் போன்ற பெரியார்கள் வாழ்ந்த இடங்களையும் காந்திஜி நேருபோன்றோர் அடைபட்டிருந்த சிறை அறைகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று ராஜ்ய சபையில் பூபேஷ் குப்தா கோரினார்.


மலர் 13] சென்னை 28-8-56, துன்முகி ஆவணி—செவ்வாய் 13 (வெளியூர் 29-8-56 ஆவணி—புதன் 14) [இதழ் 14


# "என்னை சிறையிலடைக்க சதி செய்கிறீர்கள்"

## தேர்தலில் பங்கெடுத்துக்கொள்ள விடாமல் தடுக்கச் சூழ்ச்சியா?

## நான் குற்றவாளியல்ல

### கோர்ட்டில் ஏ. கே. ஜி. முழக்கம்!

ஆமதாபாத், ஆக. 27—

இன்று தோழர் ஏ. கே. கோபாலன்மீது ஆமதாபாத் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் வழக்கு விசாரணை ஆரம்பித்தபோது, தன்மீது சாட்டப்பட்ட—"சட்ட விரோதமான கூட்டத்தைக் கூட்டியது", "தடையுத்திரவை மீறியது"—என்ற குற்றச்சாட்டுகளை மறுத்துத் தான் குற்றவாளியல்ல என்று பிரகடனப்படுத்தினார்.

மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தாக்கல் செய்த ஒரு அறிக்கையில் தோழர். ஏ. கே. கோபாலன், "அடுத்த பொதுத்தேர்தல்கள் வருவதற்குள் தன்னை சிறையில் தள்ளி, தேர்தலில்பங்கெடுத்துக் கொள்ளமுடியாமல் செய்வதற்காகவே சதிசெய்து, என்னை இப்பொழுது கைதுசெய்திருக்கிறார்கள்" என்று சர்க்கார்மீது குற்றம் சாட்டினார். அவர் அந்த அறிக்கையில் மேலும் கூறுவதாவது, "என்னைக் கைது செய்தது எனக்குப் பெரிய ஆச்சரியத்தையும், அதிர்ச்சியையும் உண்டாக்கியது. எனக்கு ஊரடங்குச் சட்ட விலக்கு அனுமதிச்சீட்டு கொடுக்கப்படவில்லை. நான் பொறுப்புள்ள ஒரு பார்லிமெண்ட் அங்கத்தினராயிருந்தும், ஏதோ தெருவில் சுற்றித் திரியும் ஒரு பையனைப் போல் என்னை நடத்தியிருக்கிறார்கள். நான் எங்கும் செல்லக் கூடாது, யாருடனும் பேசக் கூடாது என்று அதிகாரிகள் விரும்பியிருந்தால் என்மீது அவர்கள் ஒரு தடையுத்தரவு சாதரா செய்து, நான் அதை மீறியிருந்தால், பிறகு என்மீது நடவடிக்கை எடுத்திருக்கவேண்டும்."

### "மிகப் பெரிய அவமானம்"

"நான் ஆமதாபாத்துக்குச் சென்றது அங்குகுழப்பத்தைஉண்டாக்கவோ, அல்லது கலங்கிய குட்டையில் மீன் பிடிக்கவோ அல்ல. கலங்கிய குட்டையில் உள்ள மீன் ருசியாகவோ, நன்றாகவோ இருக்காது. அதற்கு மாறாக இங்குள்ள நிலைமையை நேரில் கண்டு அறிந்து செல்வதற்காக மற்றொரு பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ எச். வி. காமத்துடன் வந்தேன்" என்றார்.

"நான் விரும்பிக் கேட்டும் அதிகாரிகள் எனக்கு ஊரடங்கு விலக்கு அனுமதிச்சீட்டு கொடுக்க மறுத்துவிட்டார்கள்.

"இது எனக்கு ஏற்பட்ட மிகப் பெரிய அவமானமாகும், ஆயினும் பொறுமையுடன் சகித்தேன்.

"நான் ஆமதாபாத்துக்குள் சென்று அங்குள்ள நிலைமையை நேரில் கண்டறிந்து கொள்வதை அதிகாரிகள் விரும்பவில்லை. அல்லது நான் ஊரடங்குச் சட்டத்தை மீறினால் பிறகு கைது செய்துவிடலாம்என்பதற்காகத்தான் அவர்கள் எனக்கு அனுமதிச்சீட்டு கொடுக்கவில்லை. ஊரடங்குச்சட்டம் அமுலி


(2-ம் பக்கம் பார்க்க)


## ஒருமுனை வரி விதிக்க முடியாது

### மந்திரி மாணிக்கவேலர் கைவிரிப்பு!

சென்னை, ஆக. 27—

எல்லாப் பொருள்களுக்கும் ஒருமுனை விற்பனை வரி விதிக்க முடியாது. அது சாத்தியமல்ல. ஆனால் சில பொருள்களுக்கு ஒருமுனைவரி விதிக்கும் கொள்கையை சர்க்கார் ஒப்புக் கொள்ளுகிறது என்று 1939-ம் வருஷத்திய பொது விற்பனை வரிச் சட்டத்துக்கு ஒரு திருத்த மசோதா கொண்டுவந்து மேல் சபையில் பேசுகையில், ரெவினியூ மந்திரி மாணிக்கவேலர் மேற்கண்டவாறு தெரிவித்தார்.

திரு. வி. சக்கரை செட்டியார் பேசுகையில், "இந்தச் சட்டமே ஒரு பெரிய குழப்படி. வர்த்தக சமூகத்தின் நலனுக்கே பாதகமான சட்டம் இது. இதை நான் வன்மையாக எதிர்க்கிறேன்" என்றார்.

திரு. கே. பாலசுப்ரமண்ய அய்யர் பேசுகையில், "சர்க்காருக்கு வரி வசூலித்துக் கொடுக்கும் ஏஜெண்டுகளாக மாஜிஸ்ட்ரேட்களை இச்சட்டம் ஆக்கியிருக்கிறது. இதை வன்மையாக எதிர்க்கிறேன். கூட்டுறவு சங்கங்கள், தங்கள் அங்கத்தினர்களுக்கு சரக்கு விற்றால், அதற்கு விற்பனை வரி விதிக்கக்கூடாது. அதிகாரிகளால் வியாபாரிகளுக்கு ஏற்பட்டுள்ள தொல்லைகளை விசாரிக்க ஒரு கமிட்டி ஏற்படுத்த வேண்டும். சகல பொருள்களுக்கும் ஒருமுனைவரி விதிக்கவேண்டும்' என்றார்.

திரு. வி. வி. ராமசாமி பேசுகையில், "விற்பனை வரி ஆலோசனைக் குழுவில் அங்கம் வகிக்க ஜில்லாக்களிலுள்ள வர்த்தக ஸ்தாபனங்களுக்கும் பிரதிநிதித்வம் கொடுக்க வேண்டும். பாலுக்கும் வரி விலக்கு வேண்டும். சென்னையில் நடந்த வியாபாரிகள் மாநில மாநாட்டின் கோரிக்கைகளை சர்க்கார் ஏற்க வேண்டும்" என்றார்.

மந்திரி பதிலளிக்கையில், அதிகாரிகளை வியாபாரிகள் ஏமாற்றி விடுவதாகவும், சில பொருள்களுக்கு ஒரு முனை வரி விதிக்க உத்தேசித்திருப்பதாகவும், சமயம் வரும்போது அதைத் தெரிவிப்பதாகவும் கூறினார்.

## ஐவர் கோஷ்டியை சந்திக்க நாஸர் சம்மதம்

### வெறும் கருத்துப் பரிமாற்றமே நடக்கும்

### பாக்கிஸ்தான் போக்கினால் எகிப்து அதிர்ச்சி

கெய்ரோ, ஆக. 27—

மென்ஸிஸ் தூதுகோஷ்டியை சந்திப்பதற்கு நாஸர் சம்மதம் தெரிவித்திருப்பதாக அதிகார பூர்வமாக எகிப்திய வட்டாரங்கள் இன்று தெரிவித்தன.

இந்த சந்திப்பு எங்கு நடக்கும் என்று இன்னும் தெரியவில்லை. இந்த சந்திப்புக்கு ஒப்புக்கொண்டதின் மூலம் எகிப்து எந்தவிதமான முடிவுக்கும் தன்னைக்கட்டுப்படுத்திக்கொண்டதாக அர்த்தமில்லை. சந்திப்பின்போது இருதரப்பினரது கருத்துகளும் பரிமாறிக் கொள்ளப்படும். அவ்வளவுதான். இவ்விதம் எகிப்திய வட்டாரங்கள் அபிப்ராயம் தெரிவித்தன.

### இந்தியாவின் நிலை

எந்த பொறுப்பான அரசாங்கமும் பேச்சுவார்த்தை நடத்த முன்வரும் ஒரு தூதுகோஷ்டியை சந்திக்க மறுக்காது. ஆகவே, எகிப்திய அரசாங்கம் மென்ஸிஸ் தூதுகோஷ்டியை சந்திக்க சம்மதம் தெரிவிக்கும் என்பதில் சந்தேகமில்லை என்று வி. கே. கிருஷ்ணமேனன் இங்கு தெரிவித்தார். இப்போதைய நிலையில் சூயஸ் பிரச்னை ஐ. நா. சபைக்குக் கொண்டுபோகப்படும் என்று நான் நம்பவில்லை என்று மேலும் அவர்கூறினார். எந்தத் திட்டத்தின் பேரிலாவது எந்த வகையிலாவது பேச்சு வார்த்தைகள் நடைபெற்று, பிரச்னை தீர்ந்தால் சரி—அதை இந்தியா மகிழ்ச்சியோடு வரவேற்கும் என்றார்.

### மாஸ்கோ ரேடியோ

லண்டன் மகாநாட்டில் நிச்சயமாக சில உருப்படியான பலன்கள் ஏற்பட்டுள்ளன. அவற்றில் முக்கியமானது ஆயுத பலத்தைக் கொண்டு பயமுறுத்துவது பரிபூரணமாக முறியடிக்கப் பட்டதுதான் என்று மாஸ்கோ ரேடியோ இன்று அபிப்பிராயம் தெரிவித்தது.

### பாகிஸ்தான் போக்கில் அதிருப்தி

கராச்சி, ஆக. 27—

சூயஸ் கால்வாயை சர்வதேச உடமையாக்க ஒருபுறம் சம்மதம் தெரிவித்துவிட்டு இன்னொருபுறம் எகிப்தின் அரசுரிமையைப்பற்றி பாகிஸ்தான் வெளிநாட்டு இலாகா காரியதரிசி பேசியிருப்பது அதிர்ச்சியளிப்பதாகவும் வியப்பூட்டுவதாகவும் இருக்கிறது என்று எகிப்திய விளம்பர இலாகா டைரக்டர் இன்று 'டைம்ஸ் ஆப் கராச்சி' பத்திரிகைக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். இரண்டு முரண்பட்டக் கருத்துக்களை ஒரே சமயத்தில் பேசுவது எங்களுக்கு விளங்கவில்லை என்று கடிதத்தில் மேலும் சுட்டிக்காட்டியுள்ளார்.

### மொரார்ஜி உ. வி. முடிந்து ஊருக்குத் திரும்பினார்

ஆமதாபாத், ஆக. 27—

நேற்று தன் உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்ட ஸ்ரீ மொரார்ஜி தேசாய் இன்றிரவு குஜராத் மெயிலில் பம்பாய்க்குக் கிளம்பினார். வண்டி புறப்படு முன் "நேற்று கூட்டத்தில் 'பலத்த கல்லெறி இருந்தும்' என் பேச்சை அமைதியாகக் கேட்டதற்காக ஆமதாபாத் நகரவாசிகளை நான் பாராட்டுகிறேன்" என்று ஒரு செய்தி அனுப்பியுள்ளார்.

### அபிவிருத்தியாம்

ஆமதாபாத், ஆக. 27—

இன்று நகரில் நிலைமை அபிவிருத்தியடைந்து விட்டதென்றும், பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் மாணவர்கள் வந்து சேர்ந்து விட்டார்களென்றும், பஞ்சாலைகளும், பஸ் போக்குவரத்தும் வேலை செய்ய ஆரம்பித்து விட்டன என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

## பாக். பிரதமரின் புனர்ஜென்மம்!

### நம்பிக்கை வோட்டு எடுத்ததனால் மந்திரி சபை பிழைத்தது!

### இரண்டு லீக் மந்திரிகள் ராஜினாமா

கராச்சி, ஆக. 27—

முகம்மதலி மந்திரி சபைக்கு இன்று புத்துயிரளிக்கப்பட்டது. நம்பிக்கைத் தீர்மானத்தில் 40 வோட்டுக்கள் பெற்று அவரது மந்திரிசபை வெற்றிபெற்றது.

முஸ்லிம் லீக், ஐக்கியமுன்னணியைச் சேர்ந்த பாகிஸ்தான் சட்டசபை அங்கத்தினர்கள் கூட்டம் இன்று இங்கு நடைபெற்றபோது மொத்தம் 80 அங்கத்தினர்களில் 40 பேர் முகம்மதலி மந்திரிசபை மீது நம்பிக்கைத் தெரிவித்தனர். இந்த 40 பேர்களில் பெரும்பாலோர் கான்சாகிபின் ஆதரவாளர்களே. முஸ்லிம் லீகைச் சேர்ந்த அநேகர் கூட்டத்தில் கலந்துகொள்ளவில்லை.

லீக் ஐக்கிய முன்னணி கூட்டத்தை ஒத்திவைக்க வேண்டுமென்று முஸ்லீம் லீக் தலைவர்கள் கேட்டுக்கொண்டதை முகமதலி ஏற்காததால், பாகிஸ்தான் மந்திரிகளான சுந்த்ரீகரும், முகமது ரஷீதும் தமது பதவிகளை ராஜினாமா செய்துவிட்டனர்.

### இனி சுயேச்சையே

இந்த நம்பிக்கைத் தீர்மானம்


(2-ம் பக்கம் பார்க்க)


## போராடும் தொழிலாளர்களை நசுக்குவேன்!

### திரு-கொச்சி சர்க்காரின் மூர்க்கத்தனம்

திருவனந்தபுரம், ஆக. 27—

"சர்க்காரின் உற்பத்திப் பெருக்குக் கொள்கையை நாசம் செய்வதற்காக, சில ஆவேசப் பிரசங்கங்களின் பேச்சுகளைக் கேட்டு திரு—கொச்சி தொழிலாளர்கள் சட்டவிரோதமான வேலைநிறுத்தங்களில் இறங்குகிறார்கள். அப்போராட்டங்களை சட்டவிரோதமாக்கிவிட சட்டம் கொண்டுவரப் போகிறோம். முதலாளிகளையும் சர்க்காரையும் நிர்ப்பந்தப்படுத்தி, சீக்கிரம் சமரசம் செய்துகொள்ளுவதற்காக சட்டபூர்வமானதும், சட்டவிரோதமானதுமான ஸ்ட்ரைக்குகளில் ஈடுபடுகிறார்கள். சில சமயம் விசுவாசத் தொழிலாளர் மீதும் முதலாளிகள்மீதும் பலாத்காரம் பிரயோகிக்கிறார்கள் வேலை நிறுத்தக்காரர்கள். சர்க்கார் இதைப் பார்த்துக் கொண்டிருக்காது. கடுமையாகத் தண்டிக்கும்" என்று திரு-கொச்சி சர்க்கார் இன்று தொழிற்சங்கங்களுக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறது.

### அ. இ. கி. சபா மகாநாடு

புதுடில்லி. ஆக. 27—

அ. இ. கிசான் சபாவின் 14வது மகாநாடு அமிருதஸரஸில் (பஞ்சாப்) செப்டெம்பர் 28ந் தேதி நடைபெறும்.

# ஜனசக்தி

ஆசிரியர் குழு:
ப. ஜீவானந்தம் ஆசிரியர்,
எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராமமூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன்,
கே. முத்தையா நிர்வாகஆசிரியர்.

செய்வாய் 28—8—56


## ஜனநாயகத்திற்கு ஆபத்து

“ஜனநாயகம் மீறப்படுகிறது. யாரால்? மக்களால். எப்படி? பலாத்கார வெறியாட்டங்களால்”.

இதுதான் காங்கிரஸ் தலைமையும் காங்கிரஸ் ஏடுகளும் இன்று மூச்சுவிடாமல் செய்து வரும் பிரசாரம்

துப்பாக்கி வேட்டும், ரத்தக் களரியும், படுகொலையும், பிண நாற்றமும் நாட்டில் வரவரப் பெருகுகின்றன. சர்க்காரின் கரங்களில் மேலும்மேலும் இரத்தக் கறை படிந்துவருகிறது. இதை மறைக்க பொதுமக்களை “அடங்காப்பிடாரிகளாகவும்” “அராஜக வெறியர்களாகவும்” சர்க்கார் சித்தரித்துக்காட்டி, தங்களுடைய கண் மூடித்தனமான “கொலைகார”த் துப்பாக்கிப் பிரயோகத்தை நியாயப்படுத்தத் தலைகீழ் நிற்கிறார்கள்.

உண்மையில் இன்று ஜனநாயகப் பண்புகளை மிதித்துத் துவைப்பதில் முதற் குற்றவாளி யார்? சர்க்கார்; சர்க்கார்; சர்க்காரே என்பது நமது ஆணித்தரமான கருத்து.

இந்த உண்மையைத் தெளிவுபடுத்தச் சில நிகழ்ச்சிகளைக் கீழே தருகிறோம்:

(1) அகமதாபாத் சம்பவங்கள். ஆகஸ்டு 14-ம் தேதிவரை 16 பேர் சுட்டுக் கொல்லப்பட்டார்கள்; 101 பேர் படுகாயப் படுத்தப்பட்டார்கள்; 35 இடங்களில் துப்பாக்கிப்பிரயோகமும் 40 இடங்களில் கண்ணீர்புகைப் பிரயோகமும் செய்யப்பட்டன. 1100 பேர் கைது செய்யப்பட்டார்கள்.

“அகிம்சாவீரரான” மொரார்ஜி உண்ணாவிரதத்தில் “வெற்றிவீரராக” மாறியதும் 26ம் தேதி நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில் 3 பேர் உயிர்ப்பலி, 200 பேர் படுகாயம் அடைந்தார்கள்.

ஒன்றுபட்ட குஜராத்தி மக்களின் மொழிவழி ராஜ்யக் கிளர்ச்சிக்கு நேரு—ஜனநாயகம் அளித்த பதில் இது.

(2) ஒரிசாவில் பார்பில் சுரங்கத் தொழிலாளர்கள்மீது துப்பாக்கிப்பிரயோகம். உயிர்ப் பலியானவர்கள் மூன்று பேர்.

சங்க அங்கீகாரம் வேண்டி ஆர்ப்பாட்டம் செய்ததற்காக நேரு ஜனநாயகம் அளித்த பரிசில் இது.

(3) தஞ்சை ஜில்லாவில் மன்னார்குடித் தாலுகாவிலும், தென்னாற்காடு ஜில்லா சிதம்பரம், தாலுகாவிலும் பலர் கைதுசெய்யப்பட்டிருக்கிறார்கள்; தடியடிப் பிரயோகங்கள் நடந்திருக்கின்றன. மேற்படி தாலுகாக்கள் ஆயுதப் போலீசு முகாம்களாக விளங்குகின்றன.

விவசாயத் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரியதற்காக, நேரு—ஜனநாயகத்தின் வெகுமதி இது.

(4) அஸ்ஸாமில், சிராப்பூஞ்சி என்ற இடத்தில் ஆதிவாசிகள் மீதுகண்ணீர்ப்புகைப்பிரயோகம் நடந்திருக்கிறது.

அனாவசியமான போலீஸ் ஜபர்தஸ்து வேண்டாமென்று ஆர்ப்பாட்டம் செய்ததற்காக நேரு—ஜனநாயகத்தின் சன்மானம் இது.

இன்னும் சற்று முன்னால், மகாராஷ்டிரம், பம்பாய், டார்ஜிலிங் ஆகிய இடங்களில் துப்பாக்கிவேட்டும், சென்னையில் எம். ஆர். வி., ஜீவா மண்டை உடைப்புகளும் நடந்திருக்கின்றன.

சட்டசபை, மேல்சபை கூட்டங்கள் நடைபெறும்போது, 41வது பிரிவுப்படி போலீஸ் தடையுத்தரவு, 144 தடை உத்தரவுகள் போடப்படுகின்றன பொதுக்கூட்டம் போட பலவித நிபந்தனைகள் போடப்படுகின்றன.

சர்க்காரின் மேற்படி நடவடிக்கைகள் எதைக் காட்டுகின்றன? சர்க்கார், மக்களை மக்களுடைய ஜனநாயக உணர்ச்சிகளை மதித்து. அவர்கள் இணங்கும்படி அறிவுறுத்தி அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டும் ஜனநாயக வழியையா காட்டுகிறது? அல்ல. கையில் குவித்துவைத்திருக்கும் பலாத்கார சக்திகளை, எதேச்சாதிகாரமாக உபயோகித்து, கிளர்ச்சியில் ஈடுபடும் மக்களை, அடக்கி ஒடுக்கி அமைதியை நிலைநாட்டிவிடமுடியும் என்ற அதிகார மமதையில் எழுகிற பலாத்கார வழியைத்தான் காட்டுகிறது.

சர்க்கார், மக்கள் கருத்தைக் காலடிப்புழுதியாக மதிக்கிறது. கோரிக்கைக்கு இணங்க மறுக்கிறது. கிளர்ச்சியில் இறங்கினால், அடங்காப் பிடாரிகள் என்றுமக்கள்மீதும் தூண்டுதல்—விஷமிகள் என்று எதிர்க்கட்சிக் காரர்மீதும் அபாண்டம் சுமத்தி துப்பாக்கிப்பிரயோகத்தில் பாய்கிறது. படுகொலையையும் ரத்தக்களரியையும் கண் குளிரக் கண்டபிறகு, மக்கள் “ஜனநாயகத்தை” மதிக்கவில்லை என்று வேறு மக்கள்மீதுகுற்றம் சாட்டுகிறது.

காங்கிரஸ் ஆட்சியில் சமீபகால நடவடிக்கைகளைத் தொடர்ச்சியாக நினைவு கூர்ந்தால், அதன் பச்சையான ஜனநாயக விரோதப் போக்கு பட்டப் பகல் வெட்ட வெளிச்சமாய்த் தெரியும்.

பம்பாய்ப் பிரச்னையில் மட்டும், மேட்டுக்குடி மக்களுக்குத் துணைபோய், பொதுமக்களின் ஜனநாயகக் கோரிக்கையான மொழிவழி ராஜ்யக் கோரிக்கைக்குத் துரோகம் செய்து, நேரு சர்க்கார் 3 தடவை பல்டி அடித்திருக்கிறது. இதே பொழுதில் மொழிவழிக் கிளர்ச்சியில் ஈடுபட்ட மகாராஷ்டிர, பம்பாய், குஜரத் மக்கள்மீது நிதானம் கெட்டு, துப்பாக்கிப் பிரயோகம் செய்து உயிர்ப் பலிகள் கண்டு, அந்த மக்களின் ஜனநாயக ரோஷத்தைக் குத்திக் கிளறி விட்டிருக்கிறது. இவ்வளவு திருவிளையாடல்களையும் புரிந்து விட்டு, “ஜனநாயகத்திற்கு ஆபத்து” என்று நேரு சர்க்கார் நீலிக் கண்ணீர் வடிக்கிறது. இதைநியாயப்படுத்த, காங்கிரஸ் ஏடுகளையெல்லாம் முடுக்கி விடுகிறது.

சர்க்காரின் இந்தப் போக்கு, சர்க்காருக்கும் மக்களுக்கும் இடையில் இணக்கத்தை ஏற்படுத்தி, நாட்டில் அமைதியை நிலை நாட்டாது. மாறாக, அதிருப்தியைத்தான் எண்ணெயூற்றி எரிய வைக்கும் என்று எச்சரிக்கிறோம்.

## காசி மலைஜாதியர்மீது கண்ணீர்புகை பிரயோகம்

ஷில்லாங், ஆக. 27—

அஸ்ஸாம் வடகிழக்கு எல்லைப் பிரதேசத்தில் செர்ரபுன்ஜி நகருக்கருகே மாக்மா என்ற இடத்தில் போலீஸ் படைகள் அதிகமாக முகாம்போட்டு நிறுத்தி வைக்கப் பட்டிருந்ததை அங்கு வாழும் காசி மலைஜாதியினர் ஆட்சேபித்ததற்காக, அவர்கள்மீது போலீசார் கண்ணீர்ப் புகையைப் பிரயோகித்துள்ளனர். அக்கூட்டத்தில் ஏராளமான பெண்களும் இருந்தனர்.

முதலில் போலீசார் அக்கூட்டத்தினர்மீது தடியடியும் நடத்தியுள்ளனர்.

ஏற்கனவே காசி மலைஜாதியினருக்கும், செர்ரா சட்டக் ரோப்வே கம்பெனிக்குமிடையில் ஒரு நிலக்கரி சுரங்கத்தின் உடைமையைப் பற்றி ஒரு தகராறு ஏற்பட்டிருந்ததாம். அதற்காகத்தான் அங்கு போலீஸ் முகாமடித்திருந்ததாம்.

## திட்டக் கமிஷன் சிபாரிசுகளை அனுசரித்து நடக்க வேண்டும்

### சென்னை சர்க்காருக்கு ஆலோசனை

சென்னை, ஆக. 27—

நிலச்சீர்திருத்தப் பிரச்சினையில் குறிப்பாக நிலவுடமை வரம்பு, நியாய வாரம் முதலிய விஷயங்களில் கூடுமானவரையில் திட்டக் கமிஷனின் சிபார்சுகளை ஏற்று நடக்கும்படி சென்னை சர்க்காருக்குத் திட்டக் கமிஷனின் நிலச்சீர் திருத்த மத்தியக்கமிட்டி ஆலோசனை கூறியிருக்கிறது.

இந்த விபரத்தை இக் கமிட்டியுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தி விட்டுத் திரும்பிய சென்னை ராஜ்ய ரெவின்யூ மந்திரி திரு. எம். ஏ. மாணிக்கவேலு பத்திரிகை நிருபர்களிடம் வெளியிட்டார்.

சென்னை சர்க்கார் நிலச்சீர் திருத்த விஷயத்தில் நெடுந்தூரம் போய்விட்ட காரணத்தால் சில சிக்கல்கள் இருப்பதாக அக் கமிட்டியிடம் மந்திரி கூறினாராம். டெல்லியில் அவர் நடத்திய சர்ச்சைகள்பற்றி மந்திரி சபையில் விவாதிக்கப்படும் என்றும் திரு. மாணிக்கவேலு கூறினார்.

## நெய்வேலிக்கு ரூ. 21/2 கோடி இயந்திரங்களுக்கு ஆர்டர்

புதுடில்லி, ஆக. 27—

நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்கத் திட்டத்தை விரைவில் நிறைவேற்ற ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. 2½ கோடி ரூபாய்க்கு இயந்திரங்கள் வாங்க ஏற்பாடாகியுள்ளது. ஏற்கெனவே 2½ கோடிக்கு ஆர்டர் கொடுத்தாய் விட்டது.

இத் திட்டத்தின்படி 2 லக்ஷம் கிலோவாட் மின்சார உற்பத்தி, 70,000 டன் உரம், 3,80,000 டன் நிலக்கரி பாளங்கள் ஆகிய உற்பத்தி திட்டங்களை நெய்வேலி மேற்கொள்ளப்படும்.

## இன்ஷூரன்ஸ் சிப்பந்திகள் சங்கக் கூட்டம்

சென்னை, ஆக. 21—

இந்துஸ்தான் இன்ஷூரன்ஸ் சிப்பந்திகள் சங்க சம்மேளனத்தின் கூட்டமொன்று நேற்று சென்னை ஒய். எம். ஸி. ஏ. ஹாலில் நடைபெற்றது.

திரு. சதன்குப்தா எம். பி. தலைமை வகித்தார்.

சம்மேளனத்தின் பொதுக் காரியதரிசி திரு. கே. ஜி. கோஸ்வாமி பேசுகையில், தேச உடமையாக்கப்பட்ட இன்ஷூரன்ஸ் தொழிலில் உள்ள சிப்பந்திகளின் சம்பளங்களை எக்காரணத்தைக் கொண்டும் சர்க்கார் குறைக்கக் கூடாது என்று கேட்டுக் கொண்டார்.

திரு. சதன்குப்தா பேசுகையில்: புதிய நிலைமையில் பழைய சம்மேளனம் கலைக்கப்படுகிறதென்றும், இப்பொழுது அகில இந்திய இன்ஷூரன்ஸ் சிப்பந்திகள் சங்கம், அவர்களின் கோரிக்கைகளுக்காகப் பாடுபடுமென்றும், சிப்பந்திகளிடையே ஒற்றுமை அவசியம் என்றும் வற்புறுத்திப் பேசினார்.

## துரோகம்! துரோகம்!!

### அமெரிக்காவின் போக்குக்கு அரபு லீக் தலைவர் கண்டனம்

வாஷிங்டன், ஆக. 27—

சூயஸ்பற்றிய லண்டன் மகாநாட்டில் கலந்து கொண்டதன் மூலம் அமெரிக்கா தனது கொள்கைகள் அனைத்திற்குமேதுரோகம் விளைத்துவிட்டது என்று ஐ. நா. விலுள்ள அரபு லீக் தூதுகோஷ்டியின் தலைவர் டாக்டர் ஃபேயர் ஸெயத் நேற்று கூறினார். இந்தப் பிரச்னையில் பிரிட்டனும் பிரான்சும் குற்றவாளிகள் என்று குறிப்பிட்ட அவர் எகிப்துக்கு எதிராக நடத்தும் பொருளாதார யுத்தம் இது, ராணுவ யுத்தத்திற்கான அச்சுறுத்தல் என்றார்.

பிரிட்டனும் பிரான்சும் ஆக்கிரமிப்பாளர்கள். எனவே, அவர்களை நம்பமுடியாது. சர்வதேச விவகாரங்களில் அவர்களது பழம்போக்கு அதுவே என்றார்.

## ஸ்ரீபிரகாசா பீஹார் கவர்னராகலாம்

### திவாகர் சென்னைக்கு நியமிக்கப்படலாம்

புதுடில்லி, ஆக. 26—

ஒரிஸா கவர்னராக பீமஸேன செச்சாரும், ஆஸாம் கவர்னராக பஸல் அலியும் நியமிக்கப்பட்ட பிறகு புதிதாக அமைக்கப்பட்ட ராஜ்யங்களுக்குப் புதிய கவர்னர் நியமனம் சம்பந்தமான ஹேஸ்யங்கள் பரவிய வண்ணமிருக்கின்றன.

சென்னை ராஜ்ய கவர்னர் ஸ்ரீ பிரகாசா பீஹார் கவர்னராக நியமிக்கப்படலாம். இப்பொழுது பீஹார் கவர்னராக உள்ள திவாகர் சென்னை கவர்னராகலாம்.

நவநகர் ஜாம்சாகிப் புதிய இருமொழி மாகாணமான பம்பாய்க்கும், ஜெயப்பூர் மன்னர் மத்தியப் பிரதேச கவர்னராகவும் நியமிக்கப்படலாம்.

## தொழிற் சங்கத்தின் தலைவர்களுக்குத் தண்டனை

எர்ணாகுளம், ஆக. 27—

திரு-கொச்சியின் தொழிற் தகராறு சரித்திரத்திலேயே முதல் தடவையாக, தொழில் தகராறு சட்டத்தின் தண்டனை விதிக்கும் ஷரத்துக்களை அமுல் நடத்தியுள்ளார்கள்.

உதவி லேபர் கமிஷனர் ஜம்னா நூல் மில் தொழிலாளர் சங்கத் தொழிலாளர் சங்கத் தலைவர் வி. ஆர். மேனனையும், காரியதரிசி கே. கே. நாயரையும், மற்றும் இரு தொழிலாளர்களையும் தண்டித்திருக்கிறார். அந்தத் தலைவர்கள் மத்தியஸ்தர் முன் தகராறு இருக்கும்போது சட்ட விரோதமான வேலைநிறுத்தத்தில் தொழிலாளர்களை ஈடுபடுத்தினார்களாம்.

இந்த வெள்ளை முதலாளியின் மில்லில், 1955-ம் வருடத்துக்கு போனஸ் வேண்டுமென்று ஆகஸ்டு 16 முதல் 1500 தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்து வருகிறார்கள்.

## விற்பனை வரிக்கு எம்.பி.களின் எதிர்ப்பு

புதுடில்லி, ஆக. 27—

ஏழை மக்கள் உபயோகப் படுத்தும் அத்யாவசியப் பண்டங்களுக்கு விற்பனை வரி விதித்திருப்பது கவலை தருகிறது என்று டில்லி பார்லிமெண்டிலும், மேல் சபையிலும் அங்கத்தினர்கள் கவலை தெரிவித்தார்கள். அதன் பேரில் நிதி மந்திரி ராஜ்ய முதலமைச்சர்களுக்கு கடிதமெழுதியிருக்கிறார். அதில், உப்பு, பவுடர் பால், மோட்டா ஜவுளி, உணவுப் பொருள்கள்மீதுள்ள விற்பனை வரி, ஏழைகளைப் பாதிக்காதபடி அமுலுக்குக் கொண்டு வருமாறு கேட்டுக் கொண்டிருக்கிறார்.

## கோயமுத்தூரில் ஒரு தமிழ் சர்வ கலாசாலை

### கல்வி அமைச்சர் நம்பிக்கை

மதுரை தியாகராஜா கல்லூரியில் தமிழ் பேராசிரியராகவுள்ள டாக்டர் ராஜமாணிக்கம் பிள்ளைக்கு பொன்னாடை போர்த்தும் விழாவில் பேசுகையில், கோயமுத்தூரில் ஒரு தமிழ் சர்வ கலாசாலை ஏற்படும் நாள் சீக்கிரமே வருமென்று, தான் நம்புவதாக, சென்னை ராஜ்யக் கல்வி இலாகா அமைச்சர் திரு. சி. சுப்ரமண்யம் குறிப்பிட்டார்.

அவர் மேலும் பேசுகையில் திரு. எம். ஏ. முத்தையா செட்டியாரைப் போன்ற பரோபகாரிகள் அக்கறை எடுத்தால் தமிழ் சர்வ கலாசாலை வெகு விரைவில் தோன்ற முடியும் என்றும் தெரிவித்தார்.

“தமிழுக்கு ஒரு சர்வ கலாசாலை அவசர அவசியமாகும். இத்தகைய ஒரு சர்வ கலாசாலை முதல் முதலில் கோவையில் ஏற்படுத்தப்படவேண்டும்” என்று இறுதியாகக் கூறினார்.

## தண்டித்தவர்கள் தண்டிக்கப்படுவார்கள்

### மே. ஜெர்மனி கம்யூனிஸ்ட் கட்சி சங்கநாதம்

பெர்லின், ஆக 20.—

மேற்கு ஜெர்மனி கம்யூனிஸ்ட் கட்சிமீது தடை விதிக்கப்பட்டதை வன்மையாகக் கண்டித்து, அந்தக் கட்சியின் மத்திய கமிட்டி இன்று ஒரு அறிக்கைவெளியிட்டுள்ளது.

ஜெர்மன் முதலாளிகள், அமெரிக்க ஏகபோக வாதிகள் முதலியோரைத் திருப்திபடுத்துவதற்காக மேற்கு ஜெர்மன் அதிபர் அடினார் கம்யூனிஸ்ட் கட்சியை சட்ட விரோதமாக்கியிருக்கிறார். என்றுமே கம்யூனிஸ்ட் கட்சி போராட்டத்தில் தான் வளர்ந்திருக்கிறது. இனியும் வாழும், வளரும் என்பதில் சந்தேகமில்லை. இன்று கம்யூனிஸ்ட் கட்சியைத் தண்டித்தவர்கள் நாளை மக்களால் நிச்சயமாகத் தண்டிக்கப்படுவார்கள். இவ்விதம் அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

(முதற் பக்கத் தொடர்ச்சி)

வில்லாத பிரதேசங்களில் தான் நான் சுற்றிப்பார்த்தேன்” என்றார்.

### கூட்டத்தை மீறவில்லை

தான் கைது செய்யப்பட்ட சம்பவம் எவ்வாறு நிகழ்ந்தது என்பதைப்பற்றி தோழர் கோபாலன் குறிப்பிடுகையில், “துப்பாக்கிப் பிரயோகத்தால் கொல்லப்பட்ட ஒரு தியாகியின் குடும்பத்தினரைக் காண நான் அவர் வீட்டுக்குச் சென்றிருந்தேன். நான் வந்துள்ள செய்தி அக்கம் பக்கத்தில் பரவி, பலர் என்னைப் பார்க்க அங்கு திரண்டுவிட்டனர். என்னால் முடிந்ததையெல்லாம் பார்லிமெண்டில் செய்வதாக நான் அவர்களுக்கு வாக்களித்தேன். அன்று ஊரடங்குச்சட்டம் அமுலிலில்லை. 144 தடை யுத்திரவு அங்கு இருந்ததா என்பது எனக்குத் தெரியாது. சொல்லப்போனால் சில காங்கிரஸ்காரர்கள் சில பகுதிகளில் கூட்டங்கள் நடத்திக் கொண்டிருந்தார்கள்.

“ஆகவே நான் எந்தத்தடையையும் மீறவில்லை. நான் குற்றவாளியுமல்ல” என்று தோழர் ஏ.கே. கோபாலன் கூறினார்.

## பாக். பிரதமரின் . . .

(முதற் பக்கத் தொடர்ச்சி)

நிறைவேறியதற்குப் பிறகு, தம்மை இனி ஒரு சுயேச்சையாகக் கருதி ஆதரவு காட்டலாமென்று முகமதலி கான்சாகிபின் குடியரசுக் கட்சியினரிடம் கூறியதாகத் தெரிகிறது.

### மந்திரி சபையில் மாறுதல்

இன்றைய நிகழ்ச்சிக்குப் பிறகு, மந்திரி சபையில் சில முக்கிய மாற்றங்கள் செய்வது தவிர்க்கமுடியாததாகி விட்டது என்று கூறப்படுகிறது. சுந்த்ரீகருக்கும், ரஷீதுக்கும் பதில் பெரோஸ்கான் நூனும், குலாம் அலிதாபூரும் மந்திரிகளாக நியமிக்கப்படலாம்.

# விசைத்தறி திணிப்புக்கு மேலும் எதிர்ப்பு

ஹைதராபாத், ஆக. 26—

இந்திய சர்க்கார் விசைத்தறிகளைப் புகுத்தும் எண்ணத்தைக் கைவிடவேண்டும். அதற்கேற்பத் தமது துணிக்கொள்கையை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று ஹைதராபாத் கைத்தறி நெசவாளர் மத்தியக் கூட்டுறவு சங்கத்தின் நிர்வாகிகள் ஒருமுகமாக அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்கள். சென்ற புதன்கிழமையன்று நடைபெற்ற ஹைதராபாத் ராஜ்ய கைத்தறி நெசவாளர் காங்கிரஸ் காரியக்கமிட்டி விசைத்தறிகள் புகுத்தினால் நெசவாளர் தெருவில் நின்று திண்டாடநேரும் என்றும், எனவே எக்காரணங் கொண்டும் புகுத்தக்கூடாதெனவும் தீர்மானம் நிறைவேற்றியுள்ளன.

## உ. பி. காங்கிரஸ்வாதிகள் புதிய முன்னணி ஜனனம்

லக்ஷ்மணபுரி, ஆக. 26—

உத்தரப் பிரதேஷ் முன்னாள் காங்கிரஸ் கட்சித் தலைவரும், முன்னாள் நிதிமந்திரியுமான ஸ்ரீ எஸ். கே. டி. பாலிவால் தலைமையில், முன்னர் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட காங்கிரஸ் வாதிகள் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு மகாநாடு கூட்டி, ஓர் முன்னணி ஏற்படுத்தப் போகிறார்களாம்.

நாட்டில் ஜனநாயகத்தைப் பாதுகாக்க, ஒரு பலம் வாய்ந்த, முற்போக்கான ஐக்கிய முன்னணி ஏற்படுத்துவதே மகாநாட்டின் நோக்கமாகும். ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள சகல கட்சிகளையும், சக்திகளையும் தன்னுள் கொண்டதாயிருக்கும் இந்த முன்னணி. காந்தியமும் மார்க்ஸிஸமும் கலந்திருக்குமாம்.

## கைநெசவாளர்பற்றி மந்திரி டி. டி. கே. பேச்சு

பம்பாய், ஆக. 26—

அகில இந்திய கைத்தறி போர்டின் விசேஷக் கூட்டம் இங்கு நடைபெற்றது. அதில் கைத்தொழில், வர்த்தக மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி பேசுகையில் குறிப்பிட்டதாவது.

"எல்லா நெசவாளர்களையும் கூட்டுறவு இயக்கத்துக்குள் கொண்டுவரவேண்டும். கூட்டுறவு ஸ்தாபனத்துக்குள் உள்ள சகல தறிகளுக்கும் ரூ. 300 வீதம் நிர்வாக மூலதனம் கிடைக்கச் செய்யவேண்டும். சாத்தியப்பட்ட அளவுக்கு குழித்தறிகளை ஒழித்துவிட்டு, பிரேம் தறிகளை ஏற்படுத்த வேண்டும்" என்று ஆலோசனை கூறினார்.

## இந்தியாவில் சர்க்கரை உற்பத்தி

புதுடில்லி, ஆக. 25—

இந்தியாவில் இந்த வருடத்தில் ஆகஸ்ட் 15-ந் தேதியுடன் முடியும் உற்பத்தி சீசனில் மொத்த சர்க்கரை உற்பத்தி 18 லட்சத்து 54 ஆயிரம் டன்கள். இதில் 13 லட்சத்து 53 லட்சம் டன்கள் விற்பனைக்கு வந்திருக்கிறது.

சென்ற ஆண்டு இதே சீசனில் உற்பத்தி 15 லட்சத்து 84 ஆயிரம் டன்களும், விற்பனைக்கு கொண்டு வந்தது 9 லட்சத்து 2 ஆயிரம் டன்களுமாகும். தொழிற்சாலைகளில் நிலுவையாக 9 லட்சத்து 10 ஆயிரம் டன் சர்க்கரை இருக்கிறது என்ற சர்க்கார் செய்தி இலாகா அறிக்கை ஒன்று கூறுகிறது.

# நியாயவிலைக் கடைகள்

## போடியில் ஏற்படுத்தக்கோரிக்கை

போடி, ஆக. 23—

இன்று இங்கு முகாமிட்டிருந்த மதுரை ஜில்லா கலெக்டர் குஞ்சிதபாதத்தை சந்தித்து, பெரியகுளம் தாலூகா விவசாயிகள் சங்கத் தலைவர் ஆர். கே. சென்னையசாமி ஒரு மகஜர் சமர்ப்பித்தார். இந்த மகஜரில், தான்ய விலையேற்றம் காரணமாக போடியில் ஏழை மக்கள் பெரும் அவதிப்படுகிறார்கள் என்றும், ஆகவே உடனடியாக நியாய விலைக்கடைகள் மூலம் குறைந்த விலையில் அரிசி, உப்பு, சோளம் முதலியவை விற்பனை செய்யப்படவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளப்பட்டிருந்தது. மகஜருக்குப் பதிலளிக்கையில், கேப்பை, சோளம் கையிருப்பில் இல்லையென்றும், ஆனால் அரிசியை நியாய விலைக் கடைகள் மூலம், விற்பனை செய்ய ஏற்பாடு செய்வதாகவும் கலெக்டர் உறுதி கூறினார். (ந. நி.)

## வரி உயர்வுக்கு எதிர்ப்பு

போடி, ஆக. 23—

போடி நகரசபை சாக்கடை வரியை உயர்த்தியுள்ளதையும், சலவை, தையல், மருத்துவத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு புதிதாக வரி விதித்திருப்பதையும் ஆட்சேபித்து, ஐக்கியத் தொழிலாளர் சங்கக் காரியதரிசி நம்மாள்வார், விவசாய சங்க காரியதரிசி வி. சென்னையசாமி, முஸ்லிம் ஜமயத் காரியதரிசி இப்ராஹிம், கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி பி. ராமர் முதலியோர் பொதுமக்களிடம் நூற்றுக்கணக்கான கையெழுத்துக்கள் வாங்கி, மகஜர் ஒன்றை நகரசபைக் கமிஷனரிடம் இன்று சமர்ப்பித்தனர்.

## தடைசெய்த உப்பை விற்க அனுமதி கோரி மகஜர்

தூத்துக்குடி, ஆக. 24—

காளவாசல் உப்பு உற்பத்தியாளர்கள் ஆணும் பெண்ணுமாக 150 பேர் ஊர்வலமாகச் சென்று உதவி சால்ட் கமிஷனரிடம் தடைசெய்யப்பட்ட உப்பை விற்க அனுமதிகோரி மகஜர் சமர்ப்பித்தனர். ஊர்வலத்தை உப்புத் தொழிலாளர் சங்கத் தலைவர் பி. ஐஸக், டி. கே. சுவாமிதாஸ், டி. எம். ஷண்முகம், பி. மாணிக்கம் முதலியோர் தலைமைதாங்கி நடத்தினர். டெப்டி கமிஷனர் ஆவன செய்வதாகக் கூறினார்.

## மிஷன் பாடசாலை ஆசிரியர் குறைகள்

தூத்துக்குடி, ஆக. 24—

திருச்செந்தூர் தாலூகாவில் மிஷன் பாடசாலை நிர்வாகிகள் ஆசிரியர் சம்பளம், பெர்மனண்டாக்குதல் போன்ற விஷயங்களில் சரியாக நடந்து கொள்வதில்லை என்று புகார் செய்தும், தமது குறைகளை எடுத்துச் சொல்லியும் மிஷன் பாடசாலை ஆசிரியர்கள் சார்பில் ஒரு மகஜர் ராஜாங்கபுரத்திற்கு வந்திருந்த கல்வி அதிகாரி டி. பி. ஐ. திரு. சுந்தரவடிவேலு அவர்களிடம் கொடுக்கப்பட்டது.

## பாலகிருஷ்ணு வீவிங் மில் கதவடைப்பை எதிர்த்து

மதுரை, ஆக. 27—

பாலகிருஷ்ணு வீவிங் மில்லை 27-8-56 முதல் கதவடைப்பு செய்வதென மில் நிர்வாகம் நோட்டீஸ் போட்டது. இதை எதிர்த்து 22-ம் தேதி தொழிலாளர்கள் ஊர்வலமாகச் சென்று கலெக்டரிடம் மகஜர் கொடுத்தார்கள்.

கதவடைப்பை ஆட்சேபித்தும், உடனே தலையிடக் கோரியும் தொழிலாளர் தலைவர்கள் சிங்கை ஏ. நல்லசிவம், தூத்துக்குடி எஸ். செல்லையா, கே.டி.கே. தங்கமணி, ஏ. பாலசுப்ரமண்யம் ஆகியோர் லேபர் கமிஷனருக்கு கூட்டாக எழுதியிருக்கிறார்கள்.

கதவடைப்பை 31-8-56 வரை ஒத்திவைக்கக் கோரி மதுரை பஞ்சாலை சங்க சார்பில் தோழர்கள் எம். என். ஆதிநாராயணன், எல். எஸ். கோபால் மூவரும் இங்கு விஜயம் செய்திருந்த உதவி லேபர் கமிஷனரைப் பேட்டிகண்டு பேசினார்கள். அதன்பேரில் கதவடைப்பை 31-ம் தேதிக்கு ஒத்திப் போட்டுள்ளது.

## கம்யூனிஸ்ட் கட்சி பத்திரிகை ஆசிரியர்கள் கூட்டம்

புதுடில்லி, ஆக. 25—

கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நடத்தப்படும் பத்திரிகைகளின் ஆசிரியர்கள், நிர்வாகிகள், பிரசுராலய நிர்வாகிகள் முதலியோரின் கூட்டமொன்று இன்று டெல்லியில் நடைபெற்றது.

கட்சிப் பத்திரிகைகள், பிரசுரங்கள் இவைபற்றிய பிரச்சினைகள் குறித்து விவாதிக்கவும் இவை அனைத்தையும் ஒருமுகப்படுத்தி நடுநாயகப்படுத்தும் உத்தேசத்துடன்தான் இக்கூட்டம் நடைபெறுகிறது.

இந்தியாவில் மொத்தம் 26 கம்யூனிஸ்ட் பத்திரிகைகள் உள்ளன. இவற்றில் ஸ்வாதினதா (வங்காளம்) விசாலாந்திரா (ஆந்திரம்) தேசாபிமானி, ஜனயுகம் (கேரளம்) ஜனசக்தி (தமிழ்நாடு) இவை தினசரிப் பத்திரிகைகளாகும். தமிழ்நாட்டின் சார்பில் கே. முத்தையா, எஸ். கிருஷ்ணசாமி, ஏ.எஸ்.மணி, கோபால்சாமி முதலியோர் கலந்து கொள்கின்றனர்.

## ரூ. 287 கோடி நஷ்டம் ரூ. 45 கோடி நிவாரணம்

### ஆறாண்டுகளில் வெள்ளக் கொடுமை

புதுடில்லி, ஆக. 25—

நமது நாட்டில் கடந்த ஆறு ஆண்டுகளாக ஏற்பட்ட வெள்ளங்களின் விளைவாக ஏற்பட்ட நஷ்டம் ரூ. 287 கோடி என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதில் மனித உயிர்கள், கால்நடைகள் நாசம் உட்படாது. இதே ஆறாண்டுகளில் வெள்ள நிவாரணத்திற்காகச் செலவழிக்கப்பட்ட தொகை ரூ. 45 கோடி. இந்தத் தகவலை இன்று கேந்திர தணிக்கை மின்சார கமிஷன் தலைவர் திரு. கான்வார் செயின் அகில இந்திய ரேடியோவில் நிகழ்த்திய பிரசங்கத்தில் வெளியிட்டார்.

## சுப்ரீம் கோர்ட்டுக்கு சென்னை நீதிபதி

புதுடில்லி, ஆக. 26—

சென்னை ஹைகோர்ட்டில் நீதிபதியாயிருந்து வரும் ஜஸ்டிஸ் பி. கோவிந்தமேனன், இந்திய சுப்ரீம் கோர்ட்டின் ஒரு நீதிபதியாக ஜனாதிபதியால் நியமிக்கப்பட்டுள்ளார்.

## அடிமைமுறை எதிர்ப்பு சம்மேளனம்

### பகிஷ்கரிப்பதாக பிரிட்டன் பயமுறுத்தல்

ஜெனிவா, ஆக. 24—

அடிமை முறைக்கு எதிராகப் புதிய உலக சம்பிரதாயங்களை நிர்ணயிப்பதற்காக ஐ. நா. சார்பில் ஒரு சம்மேளனம் நடந்துவருகிறது. சுயாட்சி பெறாத, தர்மகர்த்தா ஆட்சிகளின்கீழ் உள்ள காலனிகளாக இருக்கும் பிரதேசங்களிலும் இந்த சம்பிரதாயம் அமுலாக்கப்பட வேண்டும் என்பது பொதுவான நிலை. தமது சாம்ராஜ்யத்தின்கீழ் இருக்கும் நாடுகளில் இதை அமுலாக்கக் கூடாது. அமுல்நடத்த முயன்றால் பகிஷ்காரம் செய்வோம் என்று பிரிட்டிஷ் ஸ்காட்பாக்ஸ் பயமுறுத்தினார்.

## வி. எம். கோபால கிருஷ்ணமாசாரியார் மறைவு

சென்னை, ஆக. 27—

பிரபல தமிழ் வித்வானும் வடமொழியில் வல்லுனரும், கம்பராமாயணம், பாரதம், திருக்குறள் முதலிய நூல்களுக்கு விரிவுரைகள் எழுதியுள்ளவருமான திரு வி. எம். கோபாலகிருஷ்ணமாசாரியார் நேற்று திருவல்லிக்கேணியிலுள்ள தமது வீட்டில் மரணமடைந்தார்.

# விவசாயத் தொழிலாளர்கள் மீது போலீஸ் அதிகாரி தாக்குதல்

## மேலும் பலர் கைது; போராட்டம் நீடிக்கிறது

மன்னார்குடி, ஆக. 26—

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் குன்னியூர் சாம்பசிவ அய்யரின் நிலங்களில்—ஆலாத்தூர், களப்பால், ராமச்சந்திரபுரம் விவசாயத் தொழிலாளர்களின் கூலி உயர்வுப் போராட்டம் நீடிக்கிறது.

களப்பாலில் 24-ந்தேதி வரை 48 பேரும், ஆலாத்தூரில் நேற்று வரை 57 பேரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

களப்பாலில் கைதான முருகையன், தங்கவேலு, நடேசன், ஆகியவர்களையும்; இன்னும் இதரர்களையும், களப்பாலில் மிராசுதார்களின் எதிரில் வைத்தே திருத்துறைப்பூண்டி சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தாக்கியிருக்கிறார் என்று தெரிகிறது. அவர்களுக்கு பலத்த காயங்கள் ஏற்பட்டுள்ளன.

விவசாயத் தொழிலாளிகள் பலத்த அடக்கு முறைக்கு மத்தியிலும் உறுதியோடு, அமைதியாகப் போராட்டம் நடத்தி வருகிறார்கள். தோழர் பி. வெங்கடேசன் எம்.எல்.ஏ., மன்னார்குடி ஆர்.டி.ஓ.வைச் சந்தித்து இது சம்பந்தமாகப் பேசியுள்ளார்.— (ந. நி.)

## மதுரை தாலூகா விவசாயிகள் ஆர்ப்பாட்டம்

மதுரை, ஆக. 26—

மதுரை தாலுக்காவிலுள்ள மாடக்குளம், பழங்கானத்தம், யானைமலை, நரசிங்கம், மங்களக்குடி, பொதும்பு, ஐராவதநல்லூர், பரவை, சமயநல்லூர் முதலிய கிராமங்களைச் சேர்ந்த 200 பேருக்கு அதிகமான விவசாயிகள் 25ந் தேதி காலை 10 மணிக்கு தங்கள் கோரிக்கைகளை கோஷித்துக்கொண்டு ஊர்வலமாகக் கலெக்டர் பங்களாவிற்குச் சென்றனர்.

மதுரை தாலூகா விவசாயிகள் சங்கத்தின் சார்பில் தோழர்கள் கே. பி. ஜானகியம்மாள், மற்றும் 5 பேர்கொண்ட ஒரு தூதுகோஷ்டி கலெக்டரிடம் ஒரு யாதாஸ்து சமர்ப்பிக்கச் சென்றனர்.

விவசாயிகளை நிலச்சுவான்தார்கள் நிலத்தைவிட்டு வெளியேற்றக் கூடாது என்றும், இன்னும் பல கோரிக்கைகளையும் அந்த யாதாஸ்தில் குறிப்பிட்டிருந்தனர்.

கலெக்டர் ஊரில் இல்லாததால், அவரைப் பார்க்க முடியவில்லை. யாதாஸ்தின் நகல்கள் ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர், ரெவின்யூ மந்திரி, முதன் மந்திரி, மதுரை ஜில்லா போலீஸ் சூப்ரெண்ட் முதலியவர்களுக்கு அனுப்பப்பட்டுள்ளன. (ந. நி.)

## உதவிக் கலெக்டருடன் பேட்டி

மதுரை, ஆக. 24—

மதுரை ஜில்லா உதவி கலெக்டரை இன்று நமது நிருபர் பேட்டி கண்டு உணவுப் பிரச்னை சம்பந்தமாக சில தகவல்கள் கேட்டபோது, மதுரை நகரில் மேற்கொண்டு மலிவு தான்யக் கடைகளை விஸ்தரிக்கும் உத்தேசம் இல்லை என்றும், ஜனங்கள், வியாபாரிகளின் விருப்பப்படி புழுங்கலரிசி சப்ளை செய்யும்படி சர்க்காருக்கு எழுதியுள்ளதாகவும், இது சம்பந்தமாக அக்டோபர் 1, 2 தேதிகளில் இங்கு முகாமிடும் அதிகாரியிடம் எடுத்துக் கூறப்படும் என்றும் உதவிக் கலெக்டர் கூறினார்.

## கூட்டணிக்கு வரவேற்பு

### சேத்தூர் பி. சோ. தீர்மானம்

சேத்தூர், ஆக. 20—

சேத்தூர் வட்டார பிரஜா சோஷலிஸ்ட் ஊழியர்கள் கூட்டம் இன்று தளவாய்ப்புரத்தில் தோழர் கங்கையா தலைமையில் நடைபெற்றது. பொதுத் தேர்தலில் பிரஜா சோஷலிஸ்ட்-கம்யூனிஸ்ட் கூட்டணி ஏற்படுவது அவசியமென்றும், சூயஸை நாஸர் தேசியமயமாக்கியது நியாயமானதென்றும், மனோகரன், சண்முகசுந்தரம் முதலியோர் பேசினர். சேத்தூரில் இருந்த போர்ட் ஆஸ்பத்திரியை மூடியதைக் கண்டித்தும், அந்த ஆஸ்பத்திரியை மீண்டும் திறக்கவில்லையென்றால் போராட்டம் நடத்த வேண்டும் என்றும், இருமொழி மாகாண அமைப்பை எதிர்த்து நடைபெற்றுவரும் போராட்டங்களை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

# காது பீடி கம்பெனியின் பிராஞ்சு முறைக்கு கண்டனம்

திருச்சி, ஆக. 25—

இனாம் கொளத்தூரில் திருச்சி ஜில்லா ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்கப் பொதுக்கூட்டம் இன்று நடைபெற்றது.

பீடித்தொழில் விசேஷ ஆபீஸரின் விசாரணைத் தீர்ப்பை உடனே வெளியிடவேண்டுமென்றும், தமிழ்நாடு தொழிற்சங்கம் சமர்ப்பித்த மகஜரில் கண்டவைகளை சட்டமாக்க வேண்டுமென்றும், இவ்வூர் காது மார்க் பீடிக் கம்பெனி நிர்வாகம், பிராஞ்சு முறை ஏற்படுத்தியுள்ளதைக் கண்டித்தும், திரும்பவும் கம்பெனி முறை கொண்டுவர சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

## சேலம்

இங்கு ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்க சார்பில் சங்க உப தலைவர் தோழர் ஜே. எஸ். அப்துல்லா அவர்களின் தலைமையில் 23-8-56ல் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தமிழகப் பிரதிநிதிகள் சென்னையில் மந்திரிகளிடம் மகஜர் கொடுத்த விபரத்தை விளக்கி, சங்கச் செயலாளர் தோழர் கே. கூடுமியான் விளக்கினார். கூட்டங்கள், ஊர்வலங்கள் நடத்தி கலெக்டரிடம் மகஜர் கொடுப்பதென தீர்மானிக்கப்பட்டது.

## நியாயவிலைக் கடை கோரி கலெக்டரிடம் மகஜர்

அரூர், ஆக. 25—

விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும், நியாயவிலைக் கடைகள் வேண்டும் என்று 150 பேர் கையெழுத்திட்ட மகஜரை, அரூருக்கு முகாம் செய்திருந்த சேலம் கலெக்டரிடமும், அரூர் தாசில்தாரிடமும், ஏ. முனுசாமி எச். ஆர். கணேசன் (கம்யூனிஸ்டுகள்) பொன்னுசாமி, கிருஷ்ணன் (தி. மு. க.) ஆகியோரடங்கிய தூதுகோஷ்டியினர் சமர்ப்பித்தனர்.

கலெக்டரும், தாசில்தாரும் ஆவன செய்வதாக வாக்களித்தனர். (ந. நி.)

## விலை உயர்வைத் தடுக்க 3000 கையெழுத்துக்கள்

சேலம், ஆக. 24—

விலைவாசி உயர்வைத் தடுக்கவும், தொழிலாளர் பகுதிகளிலும், கிராமங்களிலும் நியாய விலைக் கடைகளைத் திறக்க வேண்டுமென 3000 கையெழுத்துக்களைக் கொண்ட மகஜரை சேலம் நகர கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி கே. செல்லப்பனும், தொழிலாளர் தலைவர்கள் எஸ். எம். ராமையா, டி. ஏ. சுப்பையன், பி. குழந்தையப்பன், கே. எஸ். உத்தமலிங்கம் ஆகியோர், கலெக்டரின் பர்சனல் அஸிஸ்டெண்டிடம் சமர்ப்பித்தனர். அவர் ஆவன செய்வதாக வாக்களித்தார். (ந. நி.)

# பழிவாங்கினவர்களுக்கு வேலை

## எம். ஆர். எஸ். கம்பெனியில் மாபெரும் வெற்றி

திண்டிவனம், ஆக. 24

இங்கு எம். ஆர். எஸ். பஸ் சர்வீஸில் நெடு நாட்களாக முற்றி வந்த தகராறு 24-8-56-ல் சுமுகமாகத் தீர்க்கப்பட்டது. இதனால் 2-9-56 முதல் தொடங்கவிருந்த தொழிலாளர் உண்ணாவிரதம் கைவிடப்பட்டது. சமரசத்தில் தென் ஆற்காடு ஜில்லா மோட்டார் தொழிலாளர் சங்கம் சார்பில் தோழர்கள் ஆர். முருகேசன், ஷேக்உசேன், கரூர் மோட்டார் தொழிலாளர் தலைவர் சாம்பசிவம் ஆகியோர் கையெழுத்திட்டனர். சங்கத் தலைவர் சி. கோவிந்தராஜனும், கரூர் தலைவர் சாம்பசிவமும் சமரசம் செய்து வைத்தனர். கம்பெனி சார்பில் திரு. எம். ஆர். சுப்ரமணியஞ் செட்டியார், திரு. எஸ். வேணுகோபால் செட்டியார் ஆகியோர் கையெழுத்திட்டனர்.

(1) நிறுத்தப்பட்ட கண்டக்டர்கள் பி. சுந்தரேசன், என். கோவிந்தராஜுலு நாயுடு ஆகிய இருவரையும், சர்வீஸ் தொடர்ச்சியுடன் மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படும்.

(2) வருடத்துக்கு 2 மாத சம்பளம் போனஸாகவும், 1953 முதல் 56 வரை வருடத்திற்கு ஒரு மாத போனஸாகவும் சேர்த்துத் தரப்படும்.

(3) டிரைவர், கண்டக்டர்களுக்கு வருடத்துக்கு ரூ. 2 சம்பள உயர்வு தரப்படும். 1953 முதல் 56 வரை தரப்படவேண்டிய சம்பள உயர்வு நிலுவையைச் சேர்த்துக் கொடுக்கப்படும்.

(4) இதுவரை பெற்றிராத சட்டப்படி லீவு உரிமையும் கிடைத்தது.

போனஸ், பழிவாங்கப்பட்டவர்களுக்கு வேலை ஆகிய பிரச்னைகளில் முதலாளிக்கு விட்டுக் கொடுத்து சமரசம் செய்ய சிதம்பரம் மோ. தொ. சங்கத்தைச் சேர்ந்த சிதம்பரம் சின்னத்தம்பி வாத்தியார், சென்னை குழந்தைவேலு, திருக்கோயிலூர் ராமலிங்கம் ஆகியோர் ஈடுபட்டனர்.

துரோகப் படலத்துக்கு தொழிலாளர்கள் இடம் கொடுக்காததால், வந்த வழியைப் பார்த்துக் கொண்டு போய்விட்டார்கள்.

## ஹார்வி மில் விசாரணை

மதுரை, ஆக. 24—

மதுரை ஹார்வி மில்கள்பற்றிய பிரச்னைகள் இன்று மதுரை திருநகரில் விசேஷ தொழில் கோர்ட்டார் கனம் என். ராதாகிருஷ்ண முதலியார் முன்னிலையில் 23-8-56 விசாரணை நடைபெற்றது.

மானேஜ்மெண்டாரின் வேலைப்பளுத் திட்டம், சம்பள சிபாரிசு, அடிப்படைச் சம்பளம் மாற்றியமைப்பதுபற்றி, பழைய மில் 10வது சைடு வேலைப்பளு குறைப்பது பற்றிய பிரச்னைகள் வரையறுக்கப்பட்டன.

மானேஜ்மெண்டாரின் தரப்பில் 11 சாட்சி லிஸ்டு கொடுக்கப்பட்டது. சாட்சிகள் விபரத்தையும், தஸ்தாவேஜிகளையும் 30-8-56க்குள் சமர்ப்பிக்க வேண்டும். 5-8-56 முதல் சாட்சிகள் விசாரணை தொடங்கும்.

## தமிழ் ஆட்சிமொழி மாநாடு

குளித்தலை, ஆக. 25—

தமிழ் ஆட்சிமொழி மாநாடு திருச்சி மாவட்டம் குளித்தலையில் 7-10-56-ம் தேதி ஞாயிறன்று நடைபெறுமென்றும், மாநாட்டை திரு. பாரதிதாசன் தலைமையில் யோகி சுத்தானந்தபாரதியார் திறந்து வைப்பார் என்றும், மற்றும் தமிழ் அறிஞர்கள் கலந்து கொள்வார்களென்றும், தீர்மானங்கள் அனுப்புவோர் செப்டம்பர் 20-ம் தேதிக்குள் அனுப்ப வேண்டும் என்றும் மாநாட்டு செயலாளர் திரு. போலமன் அறிவிக்கிறார்.

## தொழில் உறவு தினம் கொண்டாடுக!

மதுரை, ஆக. 25—

மதுரை புட்டுத் தோப்பு மைதானத்தில், பஞ்சாலைத் தொழிலாளர் சங்க உபதலைவர் பி.கே. ராமசாமி தலைமையில் நடந்த மாபெரும் தொழிலாளர் கூட்டத்தில் தி. நா. தொ. ச. பொதுச் செயலாளர் தோழர் கே. டி. கே. தங்கமணி பேசுகையில், 3-9-56ல் தொழில் உறவு தினம் கொண்டாடுமாறு கேட்டுக்கொண்டதுடன் ஏ. ஐ. டி. யு. சி. ஜெனரல் கவுன்சில் தீர்மானத்தையும் விளக்கிப் பேசினார். பஞ்சாலை சங்க உபதலைவர் ஏ. பாலசுப்ரமண்யம் ஹார்வி நடவடிக்கைகளைப்பற்றிப் பேசினார்.

பாலகிருஷ்ணா மில்லில் கதவடைக்கப்படுவதைக் கண்டித்து தீர்மானம் நிறைவேறியது.

## மதுரைத் தமிழ்ச் சங்க மாணவர் மன்றம்

மதுரை, ஆக. 25—

மதுரைத் தமிழ்ச் சங்க மாணவர் மன்ற அமைப்புக் கூட்டம் 23-8-56 வியாழனன்று இரவு 8-30 மணிக்கு தமிழ்ச் சங்கக் கட்டிடத்தில் திரு. அ. ஷண்முகக்கனி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மன்றத்தின் அவசியம் குறித்தும் அது இயங்கும் விதிமுறைகள்பற்றியும் அமைப்பாளர் திரு. புத்தனேரி வெங்கடாசலம் விளக்கிப் பேசினார். மன்றத்திற்கு "செந்தமிழ்க் கல்லூரி மாணவர் மன்றம்" எனப் பெயரிடப்பட்டது. பின்னர், தலைவர் திரு. அ. ஷண்முகக்கனி, செயலாளர் புத்தனேரி ரா. வெங்கடாசலம், துணைச் செயலாளர் சிக்கந்தர்ஷா, செயற்குழு உறுப்பினர்கள் திருமதி இராஜலட்சுமி, திரு. இராஜாராம் முதலியோரடங்கிய செயற்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

## இந்தியாவின் பாத்திரத்திற்கு சூ என் லாய் பாராட்டு

பிகின், ஆக. 26—

இந்தியா ஆசியாவில் சமாதானத்தை நிலைநாட்டுவதில் தன் பாத்திரத்தை திறம்பட வகித்து வருவது மாத்திரமல்ல ஆசிய ஆப்பிரிக்க மண்டலத்தில் சமாதானத்தைப் பேணிக் காக்கவும், முழு உலகிலும் சமாதானத்தை நிலைபெறச் செய்யவும் உழைத்து வருகிறது. லண்டன் மகாநாட்டில் எகிப்தின் அரசுரிமையைப் பாதுகாத்தது என்று இந்தியாவின் பாத்திரத்தைப் பாராட்டினார் சீனப்பிரதமர் சூ என் லாய், லாவோஸ் சர்க்கார் தூதுகோஷ்டிக்கு ஜனாதிபதி மாஸேதுங் அளித்த விருந்தின் பொழுது இவ்வாறு குறிப்பிட்டார். விருந்தில் இந்திய ஸ்தானிகர் ஆர். கே. நேரு கலந்து கொண்டார்.

## அமெரிக்க கடல் விமானப் படையின் ஆத்திரமூட்டல்

### பீகிங் ரேடியோ அம்பலமாக்குகிறது

ஹாங்காங், ஆக. 24—

மத்திய சீனக் கடற்கரையோரங்களில் அமெரிக்காவின் ஏழாம் கடற்படை ஆத்திரமூட்டத்தக்க பல செயல்களில் ஈடுபட்டிருப்பதாக பிகிங் ரேடியோ கூறுகிறது. இதேபோல 18 விமான கோஷ்டிகள் 56 முறை செங்ஸா தீவின்மீது அத்துமீறி, நுழைந்து ராணுவ அடிப்படையில் ஆத்திரமூட்டல் நடவடிக்கைகளில் ஈடுபட்டன எனவும் கூறுகிறது.

## சோவியத்-இந்தோனேஷிய கால்பந்து போட்டி

ன்டாலின்னே, ஆக. 26—

சோவியத் யூனியனில் சுற்றுப் பிரயாணம் செய்துவரும் இந்தோனேஷிய கால்பந்து கோஷ்டிக்கும், சோவியத் கோஷ்டிக்கும் இன்று இங்கு நடைபெற்ற ஆட்டத்தில் சோவியத் கோஷ்டி 2 'கோல்' போட்டு ஜெயித்தது. இந்தோனேஷியா கோஷ்டி 1 'கோல்' தான் போட்டது.

# தாது எண்ணெய் ஆராய்ச்சி வேலைகள்

## ஒருமுகப்படுத்த சர்க்கார் அமைப்பு

கல்கத்தா, ஆக. 25—

இந்தியாவில் எண்ணெய் கிடைக்கிறதா என்று தேடி ஆராய்ச்சி செய்யப் பல வெளிநாட்டுக் கம்பெனிகள் முன் வந்து வேலை செய்கின்றன. இவற்றின் வேலைகளை ஒருமுகப்படுத்தி நடத்த ஓர் இணைப்பு ஸ்தாபனமொன்றை சர்க்கார் நிறுவும் என்று இயற்கை செல்வாதார இலாகா மந்திரி திரு. கே. டி. மாளவியா ஒரு பயிற்சித் திட்டத்தை ஆரம்பித்து வைக்கும்பொழுது கூறினார்.

தாது எண்ணெய்களை இறக்குமதி செய்ய இந்தியா ஆண்டுதோறும் ரூ. 75 கோடி செலவழிக்கிறதென்றும், எனவே சர்க்கார் எண்ணெய் ஆராய்ச்சிக்கு ரூ. 30 கோடி ஒதுக்கியிருப்பது இதன் முக்கியத்துவத்தையே காட்டுகிறதெனவும் எண்ணெய் ஆராய்ச்சிப் பகுதி நிர்வாகி ஏ.எம்.என். கோஷ் கூறினார்.

## 'ஜனசக்தி' கண்டு குலை நடுக்கம்

### நகர சபைக்கு வேண்டாமாம்?

தூத்துக்குடி, ஆக. 26—

ஜனசக்தி தினசரியை நகர சபையார் வாங்கவேண்டும் என்று கோரி ஜனசக்தி ஏஜெண்டிடம் இருந்து வந்த கடிதம் நேற்று மாலை நடைபெற்ற நகர சபைக் கூட்டத்தில் விவாதத்திற்கு வந்தது. ஏற்கெனவே வாரப் பத்திரிகையாக இருந்த பொழுது ஜனசக்தி இருபிரதிகள் வாங்க அலுவலகம் குறிப்பிருந்தது. ஜனசக்தி தினசரி வாங்கக் கூடாதென்று அகஸ்தின் பர்னாந்து (காங்) தீர்மானம் கொண்டு வந்தார் ஓட்டுக்கு விடப்பட்டு நிறைவேற்றப்பட்டது. கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் உறுப்பினர் நால்வர் வாங்கவேண்டும் என்று வாக்களித்தனர்.

## அமெரிக்கப் பால் பவுடர் வேண்டாம்

### நோய் தருவதாக நகர சபையில் புகார்

தூத்துக்குடி, ஆக. 25—

தூத்துக்குடி நகரசபை சார்பில் நடைபெறும் தாய் சேய் விடுதிகளில் வினியோகிக்கப்படும் அமெரிக்கப் பால் பவுடர் நோய்களைத் தருகிறது என்று கம்யூனிஸ்ட் கவுன்சிலர்கள் டி. கே. சுவாமிதாஸ், எஸ். எஸ். மாணிக்கம், ஜி. சுடலைமுத்து ஆகியோர் ஆட்சேபம் கிளப்பினர். அதில் சத்துள்ளதாக காங்கிரஸ் கவுன்சிலர் சிலர் பேசினர். காங்கிரஸ் கவுன்சிலர் ராமய்யாபிள்ளை பசும்பாலே நல்லது என்றார். வழக்கம் போல் பால் சப்ளை செய்ய முடிவு செய்யப்பட்டது.

## கிணறுவெட்ட பூதம்!

### ரூ. 1,68,000 சுவாஹா

### மந்திரவாதியிடம் ஏமாந்த மத்திய பாரத் சர்க்கார்

இந்தோர், ஆக. 25—

இங்கே வெட்டுங்கள்! வற்றாத ஊற்றுகத் தண்ணீர் பெருக்கெடுக்கும்! என்று சொன்ன ஒரு மந்திரவாதியின் பேச்சை நம்பி ஒரு கிணறைத் தோண்ட மத்ய பாரத் அரசாங்கம் முன்வந்தது. தண்ணீர்ப் பஞ்சம் வருமா என்று நிபுணர்களைக் கலந்து கொள்ளவில்லை, விளைவு என்ன? 2 லட்சத்து 46 ஆயிரம் ரூபாய் செலவழித்தும் போதிய தண்ணீர் கிடைக்கவில்லை. இதற்காக வாங்கிய யந்திரங்கள்தான் மிச்சப்பட்டது. 1 லட்சத்து 68 ஆயிரம் ரூபாய் கிணற்றுக்குள் போயே விட்டது. இதை வீண் விரயச் செலவு என்று ஆடிட் அறிக்கை எடுத்துக்காட்டியுள்ளது.

# சுதந்திரப் போராட்டத்தில் உறுதியான பங்கு

## சர்வதேச மாணவர் மகாநாடு

பிராக், ஆக. 26—

வீர சுதந்திரம் வேண்டிப் போராடிவரும் காலனி நாட்டு மாணவர்களுக்கு முன்னைக் காட்டிலும் இன்னும் உறுதியான ஆதரவை அளிக்க வேண்டும். பல்வேறு வகையான உதவிகளைச் செய்ய வேண்டும் என்று இன்று பிராக் நகரில் நடைபெறும் நாலாவது சர்வதேச மாணவர் மாநாட்டில் சர்வதேச மாணவர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையில் வலியுறுத்தியுள்ளது.

நாளொரு மேனியாக அதிகரித்துவரும் மாணவரியக்க வேலைகளின் காரணமாக காலனி மக்களின் விடுதலைப் போராட்டப் பிரச்சினைகளைப் பற்றிக் கவனித்து அவற்றுக்கு உறுதுணையான காரியங்கள் செய்வதற்கென்றே ஒரு விசேஷ இலாகா அமைக்க மாநாடு முடிவு செய்தது. எண்பது நாடுகளிலிருந்து 6000 மாணவர் பிரதிநிதிகள் மாநாட்டில் கலந்து கொண்டார்கள்.

## கட்டாய வோட்டளிப்பு

சிங்கப்பூர், ஆக. 27—

நடைபெறவிருக்கும் தேர்தலில், ஊழல்கள் நடைபெறாதபடி தடுப்பதற்காக, கட்டாய வோட்டளிப்பு முறையைப் புகுத்துவதற்கு தொழிலாளர் முன்னணி சர்க்கார் திட்டமிட்டுள்ளது.

## ரூ. 38½ லக்ஷம் தங்கம் பிடிபட்டது!

கோழிக்கோடு, ஆக. 27—

நேற்று கண்ணனூருக்கு அருகில் உள்ள தல்லாத் என்ற ஊரில், எம். கே. சீனிவாசன் என்பவருடைய வீட்டில் 38 லக்ஷத்து 40 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 32,340 தோலா தங்கம் பிடிபட்டது. வீட்டுத் தோட்டத்தின் வெவ்வேறு இடங்களில் தங்கம் புதைக்கப்பட்டிருந்தது.

மத்திய சுங்க இலாகா சூப்பிரெண்ட் ஸ்ரீ கோஷி சாண்டியும் 6 போலீஸ்காரர்களும் வீட்டைச் சோதனை போட்டுக் கைப்பற்றினார்கள். சீனிவாசன் தலைமறைவாகப் போய்விட்டார். அவரது தந்தை கைது செய்யப்பட்டிருக்கிறார்.

இந்தியாவிலேயே இவ்வளவு பெரிய அளவில் கள்ளச் சரக்கு பிடிபட்டதில்லை.

## அல்ஜீரியாவில் கடும்போர்

அல்ஜியர்ஸ், ஆக. 27—

அல்ஜிரியா தேசியவாதிகளை எதிர்த்து தொடுத்த கடும்போரின் விளைவாக 18 பிரெஞ்சு சிப்பாய்கள் கொல்லப்பட்டனர். இருபத்து மூன்று பேருக்குக் காயமாம். தேசியவாதிகளில் ஒன்பது பேர் உயிர் துறந்தனர். இன்னும் பல விடங்களில் மோதல் நடந்ததாகத் தெரியவருகிறது.

சைப்பிரஸ்

## சமரச முயற்சியைத்தடுக்க புதிய சதித் திட்டம்

### ஆர்ச் பிஷப் மீது அபாண்டம்

லண்டன், ஆக. 27—

சைப்பிரஸ் விடுதலை இயக்கத்தின் தலைவராக விளங்கும் ஆர்ச் பிஷப் மாகரியஸ் பயங்கர இயக்கத்திற்கு வழிகாட்டி வந்திருக்கிறார் என்ற குற்றச்சாட்டை காலனி ஆபிஸ் வட்டாரங்கள் கிளப்பியிருக்கின்றன. இதன் மூலம் சமரசத்திற்கான முயற்சிகளைத் தடுக்கச் சதி செய்யப்படுகிறது. சைப்பிரஸிலும், பிரிட்டனிலும் ஏற்பட்ட கிளர்ச்சி பலன் தரத்தக்க வேளையில் இந்தப் புதிய பூச்சாண்டி கிளப்பப்பட்டிருக்கிறது.

## பஞ்சசீல அடிப்படையில் சீனு-லாவோஸ் உடன்பாடு

ஹாங்காங், ஆக. 25—

சமாதான சகஜீவனம் என்ற கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட பஞ்சசீலத்தின் அடிப்படையில் லாஒஸ் பிரதமர் இளவரசர் சுவன்ன பூமாவும் மக்கள் சீனக் குடியரசின் பிரதமர் சூ என் லாயும் ஓர் கூட்டறிக்கை விடுத்துள்ளனர். லாஒஸ் எந்த ராணுவக் கூட்டணியிலும் சேராது, யாரும் ராணுவ தளங்களை வைத்திருக்க அனுமதியாது என்று லாஒஸ் பிரதமர் உறுதி கூறினர்.

சைப்பிரஸ்

## சர்வதேச ஆதரவைத் தவிர்க்கச் சதியா?

### மகாரியஸ்மீது பழி ஏன்?

ஆதன்ஸ், ஆக. 27—

பயங்கர இயக்க வாதிகளின் பின்னால் சூத்ரதாரியாக ஆர்ச் பிஷப் மகாரியஸ் இருந்திருக்கிறார் என்று பிரிட்டன் சிலர் தஸ்தாவேஜிகளை வைத்துக்கொண்டு தம்பட்ட மடிப்பது சைப்பிரஸ் மக்கள் விடுதலைப் போராட்டத்திற்குக் கிடைத்து வரும் சர்வதேச ஆதரவைத் தவிர்க்கச் செய்யும் சதியேயாகும் என்று கிரேக்க சர்க்கார் வட்டாரங்கள் கூறுகின்றன. அதோடு இத்தகைய பழி சுமத்தல்கள்மூலம் மகாரியஸை நிர்ப்பந்தமாக வெளிநாட்டிலேயே வைத்திருக்க முயற்சி நடக்கிறது. இயோகாவின் பலாத்காரத்தை அவர் கண்டிக்கவேண்டும் என்று நிர்பந்தனை போடப்படுகிறது என்றும் கூறப்படுகிறது.

## கால்பந்து கோஷ்டி சீனு செல்லத் தடை

### பாகிஸ்தான் சர்க்காரின் பாஸ்போர்ட் மறுப்பு

கராச்சி, ஆக. 24—

பாகிஸ்தான் கால்பந்து விளையாட்டு சம்மேளனத்தின் சார்பில் 13 பேர்களுக்கு இலங்கை, சிங்கப்பூர், சீனு முதலிய நாடுகளுக்குச் செல்ல பாஸ்போர்ட் கோரப்பட்டது. சீனுவுக்கு மட்டும் பாஸ்போர்ட் தர சர்க்கார் மறுத்துவிட்டது. இதைக் கண்டித்து டைம்ஸ் ஆப் பாகிஸ்தான் ஒரு தலையங்கம் தீட்டியுள்ளது. நல்லெண்ணத்தைப் பரப்ப உதவும் விளையாட்டுக்குமா தடை என்று ஆட்சேபித்திருக்கிறது.

Regd. No.M. 5934

Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press. (Phone 2241) 32, Broadway, Madras-1.
Editor: P. JEEVANANDAM

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON